# 7
# புலன் விசாரணை

மணி 4-30!

இன்னும் இரண்டே மணி நேரம்தான்.

பிறகு சுமியும் அவனும் இந்த உலகில் இருக்கமாட்டார்கள்!

காதல் பயன் - இது! சுமியும் அவனும் மிக யோசித்தார்கள், மிக உலவினார்கள், மிக கட்டிலில் புரண்டார்கள். முடியாது! முடியாது. இனி உயிர் வாழவே முடியாது. சாவில்தான் இணைய முடியும்!

ஆறரை மணிக்கு உயிரை இருவருமாய் முடித்துக் கொள்வோம்! வா! மரணமே வா!.

ஆம்! உலகம் அவர்களுக்கு எதிர்! அவன், சுமியைக் காதலிப்பதை உலகம் விளங்கிக் கொள்ளவில்லை.

அவன் - சுதானந்த். பெயரைப் பார் ராமா கிருஷ்ணா என்றோ, சத்தீஷ் - ப்ரகதீஷ் என்றோ, குப்பன் சுப்பன் என்றோ, இல்லையே...! சுதானந்த்-சுமி! விசித்திரமான இளசுகள்! சாவே வா! அழைக்கின்றன இரண்டும்!

சுமி! பட்டன் இல்லாத கயிறு முடிந்த காதி ஷர்ட்! பல நிறங்களில் இணைத்த கைலி! விம்மும் மார்பு. பதினேழு வயதியில் பி.எஸ்ஸி நர்ஸிங்! உதடுகளில் ஒருவித தாமரை மணம்! ஓடிகலன் ஸ்மெல் உடம்பு...

சுதானந்த்! இருபத்து இரண்டு! ரேடியோலஜிஸ்ட்! ஒரு டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் டைரக்டர்... பணம்! தொழிற்சாலை... பென்ஸ்கார்... அயல் நாட்டுப் பணம்! சொந்தமாய் லைஸன்ஸ்ட் விமானம்!

ஒரு ஹாஸ்பிடல் - ரத்தம் தர வந்தான், சுதானந்த். பளீரென்ற வெள்ளையில், சுமி காட்சி!

சுமி கேலியாகச் சிரித்தாள். சுதானந்த் மலரமலர அவளைப் பார்த்தான். சுமி கேட்டாள், ''ஆர் யூ லவ்விங் மீ! மை காட்...!''

அடேய் பயலே சிக்கினியா...?

''என்ன சார் இது? ஆர் யூ க்ரேஸி...!?''

அடேய் பின்னாலயே ஓடியாடா நாய் குட்டிமாதிரி...

''ஐ யம் வெரி ஸாரி மிஸ்டர். திஸ் இஸ் நாட் ஃபேர்!''

வாடா! வாலை ஆட்டு! குழை! சுற்றி வா! நக்கு! காலில் விழுந்து புரளு...! சுமி போய் வெகுநேரம் ஆயிற்று. அவனால் வாலையும் ஆட்டமுடியவில்லை.

அவள், அவனை விடாமல் சந்தித்தாள். தன்னைக் காதலிப்பது சிறுபிள்ளைத் தனம் என்றாள். அவன் சிரித்தான். ''இது, ஹாஸ்பிடல், அசிங்கம்

கூடாது'' என்றாள். ''சரி'' என்றான். ''பின்னாலே வரக் கூடாது; எனக்கு வேலை போய்விடும்'' என்றாள். பின்னாலேயே, ''ம்..ம்..'' என்றான். ''ப்ரெஸண்ட்ஸ் நாட் அலவ்ட்'' என்றாள். நிறைய பரிசளித்தான். ''தொடாதீர்கள்'' என்றாள். தொடக்கூடாத இடத்திலும் நெருடினான். ''ஸ்ஸ்ஹா...'' என்று சுற்று முற்றும் பார்த்தாள்; கொஞ்சம் தவிக்க அடித்தான். ''யூ ப்ரூட்! இன்டீஸண்ட்!'' என்றாள்.

''இதெல்லாம் நல்லதேயில்ல, உங்கள் ஒய்ப்க்குத் தெரிஞ்சா...'' - என்றதும் திடுக்கிட்டான் சுதானந்த்.

''என்ன முழிக்கிறீங்க. ஐ நோ!'' என்றாள் சுமி. ''நான் உங்க ஒய்பெ எக்ஸிபிஷன்ல பாத்தேன். உங்களெப் பத்தி ரொம்ப சொன்னாங்க. ஸ்வீட் வுமன்.!''

சுதானந்த் கூர்மையானான். அவளை விடவில்லை. கல்யாணமானதை வைத்து மிரட்டினாள் சுமி. அவனும் பயந்தது என்னவோ உண்மை. ஆனால் சுமிக்குத் தெரியும் ரகஸ்யம். சுதானந்த், சந்தோஷமாயில்லையாம்! எப்படி இருக்க முடியும்! சுமிக்கு, சுதானந்த்தான் சந்தோஷமே.

லலி கேட்டாள் ஒருநாள்; ''ஏன்டி, அந்த சுதா பயலை நீ லவ்வா பண்றே!''

''இல்லியே, ஏன்டி கேக்கறே...?''

''ஏன்னா, அவன் ஏற்கெனவே மாரேஜ் ஆன இட்டியட்! தெரியாதா?''

''வாட்! அதனால என்ன! லவ்தான் பண்றேன்னு நீயாவே தீர்மானிச்சுக்கிட்டியா!''

''இல்லே, ஏமாந்துடாதேன்னேன்! அவன் ஒய்ப் ஒரு ரெய்னாஸரஸ்! ஆமா!''

*

சுமி புறப்பட்டுப் போனாள். சுதானந்த் மனைவியைச் சந்தித்தாள். வெல்ஃபேர் கமிட்டி மெம்பர் என்று அறிமுகம் செய்துகொண்டாள். நல்ல சிவப்பு நிறம். வாளிப்பான உடம்பு. அமெரிக்காவில் படித்து கிராஜுவேட் ஆகி ரிஸர்ச் செய்த புத்தி. ஆனால், சுதானந்தின் ரூலர்! கண்கள் மட்டும் அசாத்ய பெரிது. மூக்கும் ஒரு குரூரம். சுதானந்த்தின் ஃப்ரெண்டாக அறிமுகம் செய்து கொள்ளவில்லை. அவள், 'சுதானந்த் ஒரு சைல்ட்' என்றாள். அவள் பெயர் அமிதா.

இத்தனை பெரிய பெண் இவ்வளவு பெரிய உடம்புடன் இத்தனை அழகாய் இருக்க முடிவது ஆச்சர்யம். எல்லா உறுப்புகளுமே ராட்சசத்தனம் கொண்ட அழகு இணைந்திருந்தது. பெரிய பெரிய விரல்கள், கைகள், தொடைகள், பின்பகுதிகள், மார்புகள், ஏராளமான படிப்பு, செல்வம், அதிகாரம். அமிதா என்கிற பெயரில் கூட ஒருவித பயம் தோன்றியது சுமிக்கு.

''சுதானந்த், பாவம்!'' என்றாள், இவள் வாயில் அப்படி வந்துவிட்டது.

''சுதானந்தைத் தெரியுமா உனக்கு? யூ நோ, மிஸ்டர் சுதானந்த், மை ஹஸ்பண்ட்!'' - அமிதாவின், குரலும் அமிதம்தான்!

நிறைய விஸ்கி சாப்பிட்டிருந்திருக்க வேண்டும். அமிதாவின் குரலும் விஸ்கி மணத்தது.

சுமி இதுபற்றி எதுவுமே சுதானந்திடம் கேட்கவில்லை.

''யு ஆர் மை ஃப்ரெண்ட், தட்ஸ் ஆல்!'' என்றாள் அவனிடம்.

...''காதல்'' என்றான் அவனும்.

நிறைய பேரை இதே சொல்லில் சுழற்றி அடித்தவள்! அனுபவம்!

சுதானந்த் கேட்டபோது அந்த ஹோட்டல் இருளில் பதில் பேசவே முடியவில்லை.

''உங்க ஒய்ப்கிட்ட பர்மிஷன் வாங்கிட்டீங்களா?'' என்று சிரித்தாள்.

''ஷீ இஸ் எ ப்பீஸ்ட்! அவ ஒரு ம்ருகம்! ஷீ இஸ் நாட் எ ஒய்ப்...'' என்றான் சுதானந்த். அவன் நடுங்கும் உடலைப் பார்த்து அப்படியே நின்று போனாள், சுமி.

முதல் முறை இந்த அனுபவம். அயர்ந்து போனாள். பொதுவாய் ஆண்கள் நெருங்கிவந்து, 'ஐ லவ்யூ' உளற ஆரம்பிப்பது புதிதல்ல. இந்த பாய்ச்சலும் நடுக்கமும், விழ அடிக்கிற பரவசமும் எப்போதும் அவளுக்கு இருந்ததில்லை - சுதானந்தையா? ஏற்கெனவே மணமான - ஒரு பிஸினஸ் மேனையா..?

அவள் பயந்தாள். அவளுக்கு சுதானந்த் தேவையாய் இருந்தது. அவளுக்குள் பயம் கரையிட்டது. அவன் வீழ்த்தி விட்டானா? அவளால் எதுவும் பேச முடியவில்லை.

அவனுக்குப் புரிந்தபோது, அவன் சொன்னான் மறுபடியும்... காதலிப்பதாக - அவள் மறுத்தாள். காதலையே நம்பவில்லை. ''அது பைத்யக்காரத்தனம். இது வெறும் ஸெக்ஸ்-தர்ஸ்ட்- உடம்பு-இருட்டுக்குக் காத்திருக்கிற ஆசை- விலைக்கு வாங்கப் பார்க்கிற முதலாளித்தனம் - படுக்கப் பாய்கிற வேசித்தனம்'' என்று சொல்லி அழுதாள். இதற்காக வெல்லாம் அவள் அழுகிறவளே அல்ல.

''உங்கள் மனைவி...?'' - என்றாள்.

''தேவையில்லை'' என்றான்.

''உங்கள் தொழில்...?'' என்றாள்.

''டாம் கோ ட்டு ஹெல்!'' என்றான்.

''உங்கள் அந்தஸ்து, ஸ்ட்டேட்டஸ்?''

''குட்டிச் சுவராகட்டுமே'' என்றான்.

''புகழ்? பணம்...?''

''அது எனக்குத் தேவையில்லை. நீ.. நீ மட்டும் போதும். நீதான்'' என்றான்!

ஒரு பெண்ணின் அந்தரங்கம் திறந்து கொண்டது!

சுமி! அவள் வாழ்க்கையில் முதல் முறையாக அசந்து போனாள். எத்தனை பேர்!? எத்தனை ஆண்!? அதில் எத்தனை மிருகம் - இதோ இவன்தான்,

இவனேதான் மனிதன்! என்னைத் தேடி வந்த ஒருவன். இருவரும் பேச்சற்ற ஆழத்தில் விழுந்து போனார்கள். பேசி அசுத்தமாக சுமியும் சுதானந்தும் விரும்பவில்லை.

*

அமிதாவுக்குத் தெரிந்து போனது- முதலில் அவள் நம்பவில்லை -இன்னொருத்தியா? தனக்குமா? நம்பவே முடியவில்லை. இந்த பயந்தாங்கொள்ளிக்கா? இனியும் ஒருத்தியை நிமிர்ந்தும் பார்ப்பவன் சுதானந்த் என்று சொன்னால்கூட அவள் நம்பமாட்டாள். கைகோர்த்து, இரண்டு புறாக்களாய் சிறகடித்து சந்தோஷித்த சுமியையும், சுதானந்தையும் கண்களால் கண்டதும் கொலை வெறி படர்ந்தது. அவர்களைப் பின்தொடர்ந்தாள். தனியே சுமியைச் சந்தித்துச் சச்சரவிட்டாள். காரணம் கூறாமல் அவமானப்படுத்தினாள்; பலனில்லை.

தனியே சுயமாய் வாழ்ந்து கொண்டிருப்பவள், சுமி. விரலுக்குக் க்யூட்டெக்ஸ் பூசுவதுகூட தானே பத்து விரல்களுக்கும் பூசுகிறவள். சுதானந்த் தனியே அவளுடன் இருந்தபோதும் ஒரு மந்திரியைப் போல் அவனை நிர்வகித்தாள். தன்னையும் மணந்து கொள்ளுவதில் அவள் கவனம் கூட்டினாள்.

அமிதா, சுதானந்தை விடத் தயாரில்லை. அமிதாவிடம் ஏராளமான பணம்; சுதானந்தின் எல்லாமே அவள் கையில் இருந்தன; குழந்தையும் இல்லை; சொத்து பயமுறுத்தியது; கல்யாணம் பண்ணிக்கொண்ட காலத்திலிருந்து இன்றுவரை சுதானந்த், அவள் அதிகாரத்துக்குட்பட்ட ஒரு பொம்மை- எந்திரம்.

சுமிக்கு இந்த விளைவுகள் புரியாதவை அல்ல. அவள் எதற்கும் தயாராகி விட்டிருந்தாள். அமிதாவைப் பார்க்கும்போது பரிதாபப்பட்டாள். வேறு விதமாய்ப் போக முடியவில்லை. பலரும் பலவிதமாய்ப் பேசினார்கள். ஊரிலிருந்து வந்த அவள் மாமாகூட எச்சரித்தார். 'வேறு ஆம்பளையே உனக்கு கிடைக்கல்லியாடீ' என்றுகூட தோழிகள் கேட்டார்கள்.

சுதானந்தின் வழிகள் எல்லாம் அடைக்கப்பட்டன; அதிகாரங்கள் பறிக்கப்பட்டன; பணம், வசதி எல்லாம் மறிக்கப்பட்டன; நண்பர்கள் எச்சரித்தனர்; உறவுக்காரர்கள் தூற்றினர்; அலுவல் உதவியாளர்கள் பரிதாபப்பட்டனர்; வயதானவர்கள் உற்றுப்பார்த்து ஒதுங்கினர்.

*

சுமி சிரித்தாள்... ஆனந்தமாய்ச் சிரித்தாள்... ''முன்பே சொன்னேனே, இப்படித்தான் வரும்...'' என்று கலகலத்தாள்.

''என்ன செய்யலாம்'' என்று படபடத்தான் சுதானந்த்.

''என்ன செய்யணும்? பிரச்னை என்ன இருக்கு இதிலெ? என்ன புரியணும்? உங்களுக்கு என்ன வேணும்?'' என்றாள்.

''சுமி! உனக்கு ஒண்ணுமே தோணல்லியா?''

''என்ன வேணும் எனக்கு? மிஸ்டர் சுதானந்த்! இனிமே என்ன வேணும்? நானே எதை நம்பலியோ அதுவே எனக்கு என் கையிலேயே கிடைச்சா... இனி என்ன வேணும்...? நீங்க போதும்; நாம் போதும்; நான் போதும்!''

''இனிமே என்ன?-சந்தோஷம்தான்!''என்றாள் சுமி.

''சுமித்ரா! பணம் வேண்டாமா?''

''வேண்டாம்!''

''வேலையும் புகழும் வேண்டாமா?''

''வேண்டாம்''

''ஊர் உலகம், ஃப்ரெண்ட்ஸ், ரிலேஷன்ஸ்!''

''வேண்டவே வேண்டாம்!''

''அப்புறம் என்னதான் வேண்டும்?''என்றான்.

''நீ போதும்'' என்றாள், அவள். இருவருமாய்த் தீர்மானித்தார்கள். அவள் மட்டுமே நம்பினாள்.

*

மணி ஐந்து! அவள் மட்டுமே திடுக்கிட்டாள். சுதானந்த் இன்னும் வரவில்லை. அவள் உடம்பின் மயிர்க்கால்கள் எல்லாம் சுதானந்த் சந்தோஷத்தில் ஆழ்ந்திருந்தது. இருளில் அவன் முத்தங்கள், இப்போது வெளிச்சத்தில் அவளுக்குக் கூசின.

அது ஒரு ஹோட்டல்; பெரிய ஹோட்டல். மாடி பால்கனியில் அவள் நின்று சுதானந்தைப் பார்த்து நிற்கிறாள். கீழே பேஸ்மெண்ட்டில் ஏராளமான கார்கள்! மெள்ள மெள்ள அடுக்கிய நெருப்புப் பெட்டிகள்; சீட்டுக் கட்டுகள்; மரங்களின் கீழே பூக்கள் எறும்புகள்.

மணி ஐந்தேகால்!

சுமிக்குக் கண்கள் பூத்தன.

'சுதானந்த் ஆர் யூ லவிங் மீ ஆர் நாட்?'

'யெஸ்!'

'ரியலி!'

-நீண்ட நேரம் தழுவிக்கொண்ட அவளுக்குள் அக்கினி படர்ந்தது.

-இன்றும் அக்கினிதான் எரிக்கிறது.

'மை டியர் சுதானந்த்! இது வழக்கமான ஒன்று இல்லை. நான் ஏமாறவே மாட்டேன், தெரியுமா? எத்தனையோ பேரை ஏமாற்றியிருக்கிறேன். ஆனால், ஏமாந்ததில்லை. என்னால் தாங்க முடியாது. நான் நர்ஸாய்த் தொழில் பூண்டவள். ஆபரேஷன் செய்யும் போது நானே நேரில் கத்திகொடுத்து அறுத்து வாங்குகிறவள்...'

ச்சீ! என்ன நினைப்பு இது?

மணி ஐந்தரை! வேர் இஸ் சுதானந்த்!

அமிதா! உன்னை நான் ஏமாற்றவில்லை. நீயும் என்னை ஏமாற்ற முடியாது.

மணி ஆறு!

அதோ சுதானந்த்! நேரே ஓடிவந்தான் பரபரப்பு! ஏனோ படபடப்பும்...

'சுதானந்த்! வாட் ஹாப்பண்ட்?'

மேஜையில் இரண்டு டம்ளர்கள்! இரண்டிலும் விஷம் கலந்த விஸ்கி! முதலிலேயே தயார். முன்பே திட்டமிட்டு வந்ததுதான். வழக்கமான காதல் முடிவுதான். உயிருடன் இருக்க முடியாது என்ற உபாயம். வழி, தப்பும் வழி. அமிதா! நீ காட்டிய வழி! மணக்க மாட்டாய்! மணக்க விடவும் மாட்டாய்.

விரிந்த கண்களுடன் இருந்தான் சுதானந்த். விஷம் கலந்த டம்ளர்களைக் கைகளில் எடுத்தாள் சுமி.

மணி ஆறேகால்!

மணியை இப்போது இருவருமே பார்க்கவில்லை. தேவையும் இல்லை.

சுமி, நிம்மதியாய் டம்ளர்களைப் பார்த்தாள். ஒன்றை அவன் கையில் கொடுத்துவிட்டுச் சிரித்தாள்.

அவன் சொன்னான்:

''சுமி! வி ஆர் நாட் லவிங் ஈச் அதர். நாம் காதலிக்கவேயில்லேன்னு தோணுது!''

அவள் பதறவேயில்லை.

''எனக்கும் தெரியும்... எதிர்பார்த்ததுதான். இவ்வளவு லேசாத் துவங்கினது இருக்குமா போகுமா என்று தெரியாமல்தான் இருந்தேன்... பட், நான்தான் லவ் பண்ணியிருந்திருக்கிறேன். அதாவது ஏமாந்திருக்கிறேன், இல்லியா?''

அவன் பயந்து விழித்தான் -மெதுவாக நகர்ந்தான் -ஓடி விடுவானோ...?

மேஜைமேல், அவள், தனது டம்ளரை வைத்தாள்; அவனும் வைத்தான். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''சுமி, ப்ளீஸ்...'' ஏதோ சொல்லத் துவங்கினான்; அடைத்துக் கொண்டது.

கட்டில் ஓரமாய்க் கிடந்த டீப்பாயில் இருந்த தட்டில், ஆப்பிள்கள்! ஒரு ஆப்பிளையும் கத்தியையும் எடுத்துக் கொண்டு சிரித்தாள், சுமி! சவம்போல் வெளுத்திருந்தது அவள் முகம். திரும்பி அந்த அறையின் கதவுகளை நெருங்கிய அவனை அவளால் என்னதான் செய்து விட முடியும்?

மணி ஆறரை!

சரியாக ஆறரை! அந்த அலறல் நீண்டு கேட்டது. ரத்தத்தை உறைய வைக்கும் அலறல்!!

*

அதற்கு வெகுநாட்களுக்கு முன்பே அது செத்திருந்தாலும்,

ஆறரை மணிக்குத்தான், காதல்தான் காரணம் என்று போலீஸார்கூட அந்த ஹோட்டலில் ரிப்போர்ட் எழுதினார்கள். விஷம் உபயோகிக்கப்படவில்லை என்று எழுதினார்கள்.

காதலில் விஷம் ஏது?

ரத்தமே சிந்தாமல் ஒரு கத்திக் குத்து தொண்டையில் இருந்தது. டாக்டருக்கும் ஆச்சரியம். சுமியின் பிணம் பரிசோதனைக்கு அனுப்பப்பட்டது. தற்கொலையாம்! யாராய் இருக்கும்?

புலன் விசாரணையில் கூடத் தெரியத்தான் இல்லை!

(மயன் - 20.1.81)

